40071

OL/2017/16-T-I, II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## இஸ்லாம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** நபி முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு முதன்முதலாக அருளப்பட்ட வசனம்
(1) பிஸ்மில்லாஹி (2) அலிப் லாம் மீம் (3) இக்ர.ஃ (4) யாஸீன்

**2.** நபிமார்கள் பாவங்களிலிருந்து பாதுகாப்புப் பெற்றவர்கள் என்பதைச் சுட்டும் பதம்
(1) மு.ஃஜிஸாத் (2) இஸ்மத் (3) ரஹ்மத் (4) ஹிதாயத்

**3.** முதலில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட விடுதலை பெற்ற அடிமை
(1) அம்மார் (ரழி) (2) பிலால் (ரழி)
(3) ஸைத் (ரழி) (4) முஸ்அப் (ரழி)

**4.** கீழே **'அ'** நிரலில் சில சொற்களும் **'ஆ'** நிரலில் அவற்றின் கருத்துக்களும் தரப்பட்டுள்ளன.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) ரிபா | A - முற்பணக் கொடுப்பனவு |
| (ii) ஸலம் | B - வாடகைக்கு விடல் |
| (iii) இஜாரா | C - கூட்டுப்பங்காண்மை |
| (iv) முஷாரகா | D - வட்டி |

இங்கு **'அ'** நிரலுக்கமைய **'ஆ'** நிரல் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) A B C D (2) B D A C (3) C B D A (4) D A B C

**5.** 'இக்லாஸ்' எனும் பதம் குறிப்பது
(1) பேணுதல் (2) இறையச்சம் (3) உளத்தூய்மை (4) பற்றற்ற வாழ்வு

**6.** சட்டத்துறைசார் விடயங்களோடு தொடர்புபடும் கலை
(1) இல்முல் பராஇழ் (2) இல்முல் பிக்ஹ் (3) இல்முன்னப்ஸ் (4) இல்முல் அகீதா

**7.** இரண்டு விடயங்களைக் கொண்டு தன்னிடம் உதவி கோருமாறு அல்லாஹ் அல்-குர்ஆனில் ஒரு வசனத்தில் குறிப்பிட்டுள்ளான். அவற்றுள் ஒன்று தொழுகை, மற்றையது
(1) திலாவதுல் குர்ஆன் (2) ஸதகா (3) பொறுமை (4) நோன்பு

**8.** 'தக்பீர தஹ்ரீமா' என்பது
(1) அல்லாஹு அக்பர் (2) தொழுகைக்காகக் கட்டப்படும் முதல் தக்பீர
(3) ஹஜ் காலத்தில் ஓதப்படும் தல்பியா (4) நபியவர்களால் நாளாந்தம் ஓதப்பட்ட துஆக்கள்

**9.** இரத்த உறவுக்குள் அடங்கும் மஹ்ரமி
(1) தந்தையின் சகோதரி (2) மருமகள் (3) மனைவியின் சகோதரி (4) மனைவியின் மகள்

**10.** பின்வருவனவற்றுள் குலபாஉர் ராஷிதூன்கள் தொடர்பான **பிழையான** கூற்று
(1) சுவனத்தைக் கொண்டு நன்மாராயம் கூறப்பட்டவர்கள்.
(2) நபிகளாருடன் திருமண உறவைக் கொண்டவர்கள்.
(3) தனித்தனியாக சிறப்புப் பெயர்களால் அழைக்கப்பட்டவர்கள்.
(4) மதீனாவை தமது தலைநகரமாக கொண்டவர்கள்.

**11.** ஸுன்னத்தான நோன்பு நோற்பதற்கு **சந்தர்ப்பம் இல்லாத** மாதம்
(1) ரமழான் (2) ரஜபு (3) ஷவ்வால் (4) ஷ.ஃபான்

[பக். 2 ஐப் பார்க்க

12. பின்வரும் சந்தர்ப்பங்களில் திருமணம் ஹராமாவது
(1) மூன்று பெண்களை மணம்முடித்து, விவாகரத்துச் செய்த பின் நான்காவது திருமணத்துக்கு முயற்சித்தல்
(2) நான்கு மனைவியர்களோடு வாழும் ஒருவர் ஐந்தாவது திருமணத்துக்கு இணங்குதல்
(3) முதல் மனைவியின் விருப்பத்தைப் பெறாது திருமணம் செய்தல்
(4) மனைவி உயிருடன் இருக்கும் போது அவளது உடன் பிறந்த சகோதரியைத் திருமணம் செய்தல்

13. அம்மார், வியாபாரமொன்றை ஆரம்பித்து ஒரு வருட கால முடிவில் ரூ. 200 000 கடனும் ரூ. 850 000 ரூபா மிகுதியும் இருந்தது. அவ்வருடம் ஒரு பவுன் தங்கத்தின் விலை ரூ. 50 000 ரூபாவாக இருந்தது. அம்மார் செலுத்த வேண்டிய ஸகாத்தின் அளவு
(1) ரூ. 2500 (2) ரூ. 13 750 (3) ரூ. 16 250 (4) ரூ. 26 250

14. 'ஜபீரத்' என்பது
(1) புழுதியுள்ள சுத்தமான மண் (2) காயத்துக்குப் போடப்படும் கட்டு
(3) குற்றப் பரிகாரம் (4) முகத்தை மறைக்கும் துணி

15. கீழே 'அ' நிரலில் சில நூலாசிரியர்களும் 'ஆ' நிரலில் அவர்களால் எழுதப்பட்ட நூல்களும் தரப்பட்டுள்ளன.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) சித்திலெப்பை | A - அஜாஇபுல் ஹிந்த் |
| (ii) எமேர்ஸன் டெணண்ட் | B - அஸன்பே சரித்திரம் |
| (iii) இப்னு ஸஹ்ரயார் | C - ஸிலோன் |

இங்கு 'அ' நிரலுக்கமைய 'ஆ' நிரல் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) A B C (2) B C A (3) C A B (4) D B C

16. 'பர்ளு' ஐன் எனப்படுவது
(1) ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயம் நிறைவேற்ற வேண்டியவை.
(2) முஸ்லிம்கள் கூட்டமாக மட்டுமே நிறைவேற்ற வேண்டியவை.
(3) ஒவ்வொருவரும் தமது விருப்புக்கமைய நிறைவேற்ற வேண்டியவை.
(4) சமூகத்தில் ஒரு சாராராவது கட்டாயம் நிறைவேற்ற வேண்டியவை.

17. நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் பின் மஸ்ஜிதுல் அக்ஸாவில் தொழுத முதல் நபர்
(1) ஸுல்தான் ஸலாஹுதீன் ஐயூபி (2) கலீபா அபூபக்ர் (ரழி)
(3) ஸுல்தான் முஹம்மத் அல்-பாதிஹ் (4) கலீபா உமர் (ரழி)

18. இத்ரீஸ் (அலை) அவர்களுக்கு வழங்கப்பட்ட ஸுஹுபுகள்
(1) 10 (2) 30 (3) 40 (4) 50

19. 'துஆஉல் இஸ்திப்தாஹ்' இல் "இன்ன ஸலாதீ..." என்ற சொற்றொடரைத் தொடர்ந்து வரும் சொற்றொடர்
(1) வமஹ்யாய வமமாதி (2) வனுஸ்கீ வமஹ்யாய (3) நுஸ்கீ வஸலாதீ (4) வனுஸ்கீ வமமாதீ

20. பின்வருவன இஸ்லாத்தின் துணை மூலாதாரங்களுள் சிலவாகும்.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) ஏகோபித்த முடிவு | A - அல்-உர்பு |
| (ii) ஒப்புவமை காணல் | B - அல்-இஜமா∴ |
| (iii) வழக்காறு | C - மஸ்லஹா முர்ஸலா |
| (iv) சமூக நலன் பேணல் | D - அல்-கியாஸ் |

இங்கு 'அ' நிரலுக்கமைய 'ஆ' நிரல் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) A B C D (2) A C B D (3) B D A C (4) C D A B

21. திருமணத்தில் ஈஜாப், கபூல் ஆகிய இரண்டுக்கும் உரித்தானவர்கள்
(1) மணமகன், மணமகள் (2) வலி, மணமகன் (3) காழி, வலி (4) மணமகன், காழி

22. அல்லாஹ் அனுமதித்தவற்றுள் அவனுக்கு மிகவும் வெறுப்பானது எனக் குறிப்பிடப்பட்ட விடயம்
(1) பலதார மணம் (2) வர்த்தகம் (3) நேர்ச்சை (4) தலாக்

23. தரம் 10 ஐச் சேர்ந்த மாணவர் குழாமொன்று சுற்றுலா சென்றுள்ளது. அதில் பகல் முழுவதும் பயணத்திற்கும் இடங்களைப் பார்வையிடுவதற்கும் திட்டமிடப்பட்டிருந்தது. இச் சுற்றுலாவில் லுஹர் தொழுகைக்கான நேரம் வந்த போது எவ்வாறு தொழுகைகளை நிறைவேற்றுவது என்ற பிரச்சினை ஏற்பட்டது. அவ்வாறானதொரு சந்தர்ப்பத்தில் எடுக்கத்தக்க சரியான தீர்மானம் பின்வருவனவற்றுள் எது?
(1) லுஹர், அஸர் தொழுகைகளை அவ்வவற்றிற்குரிய நேரங்களில் நிறைவேற்றிக் கொள்ளல்
(2) ஜம்உத் தக்தீம் அல்லது ஜம்உத் த∴கீர் செய்து கொள்ளல்
(3) தற்போதைக்கு தேவையான வசதிகள் இல்லாத காரணத்தினால் இரவு தங்குமிடத்தில் கழாச் செய்து கொள்ளல்
(4) பயணத்தைத் தொடர்ந்து இடையில் எங்கேனும் வசதியான இடம் கிடைத்தால் அங்கு தொழல்

24. "நிச்சயமாக நான் நற்பண்புகளைப் பூரணப்படுத்துவதற்காகவே அனுப்பப்பட்டுள்ளேன்" என்பது,
(1) அல்-குர்ஆன் வசனமாகும். (2) அல்-ஹதீஸ் வசனமாகும்.
(3) ஸஹாபாக்களின் வசனமாகும். (4) இமாம்களின் வசனமாகும்.

25. கியாஸின் போது தீர்வு காணப்பட வேண்டிய புதிய பிரச்சினை எவ்வாறு சுட்டப்படும்?
(1) அஸ்ல் (2) பர்உ (3) ஹுக்ம் (4) இல்லத்

[பக். 3 ஐப் பார்க்க

26. 'குல்உ' என்பது
(1) மனைவி கணவரிடம் விவாகரத்து கோருதல்
(2) மூன்று தலாக்கையும் ஒரே தடவையில் மொழிதல்
(3) விவாகம் செல்லுபடியற்ற நிலையை அடைதல்
(4) கணவன் மனைவியை விவாகரத்துச் செய்தல்

27. 'இஜ்திஹாத்' என்பது யாது?
(1) இஸ்லாமிய சட்டத்துறை அறிஞர்களின் ஒன்று கூடல்
(2) ஆலோசனைச் சபை
(3) பிரச்சினையொன்றுக்குத் தீர்வைப் பெற்றுக்கொள்வதற்காக எடுக்கப்படும் முயற்சி
(4) இஸ்லாமிய சட்டத்துறை நிறுவனங்கள்

28. ஸக்காத்தின் பர்ளுகள் இரண்டில் ஒன்று நிய்யத் வைப்பது, மற்றையது
(1) நிஸாபை அடைந்திருப்பது (2) கணக்குப் பார்த்து வழங்குவது
(3) தகுதியானவர்களுக்குக் கொடுப்பது (4) சமூக நலத் தேவைகளுக்கு முன்னுரிமையளிப்பது

29. 'உம்மதன் வஸதன்' என்பதன் மூலம் நாடப்படுவது
(1) நடுநிலையான சமூகம் (2) விட்டுக்கொடுத்து வாழல்
(3) தீவிரக் கருத்துக்களைக் கொண்டிருத்தல் (4) மௌனமாக இருத்தல்

30. ரிஸானா, கர்ப்பிணியாக இருந்த போது அவளது கணவர் 10. 10. 2014 இல் மரணமானார். அவள் 10. 06. 2015 இல் பிள்ளையொன்றைப் பெற்றெடுத்தாள். அவள் இத்தா அனுஷ்டிக்க வேண்டிய காலம்
(1) 10. 10. 2015 வரை (2) 10. 06. 2015 வரை (3) 20. 02. 2015 வரை (4) 10. 01. 2015வரை

31. நீரின் வகைகளுள் 'அல்மா உத் தஹூர்' எனப்படுவது
(1) அதிகளவான நீர் (2) சுத்தமான நீர்
(3) மிகச் சுத்தமான நீர் (4) உபயோகப்படுத்தப்பட்ட நீர்

32. 'மனிதன் அல்லாஹ்வின் பிரதிநிதி' என்பதைச் சுட்டும் சொல் யாது?
(1) கலீபதுல்லாஹ் (2) ஹபீபுல்லாஹ் (3) ரஸூலுல்லாஹ் (4) கலீமுல்லாஹ்

33. ஹதீஸ் ஒன்றில் மு.்.மினுக்கும் காபிருக்கும் இடையிலான வேறுபாடு எனக் குறித்துக்காட்டப்பட்டிருப்பது
(1) அறபு மொழியை அறிந்திருப்பது (2) தொழுகையை விடுவது
(3) ஸலாம் கூறுவது (4) அநியாயத்துக்கெதிராகக் குரலெழுப்புவது

34. நபிகளாரின் இஸ்லாமிய அழைப்பு முயற்சியைக் கடுமையாக எதிர்த்த நபிகளாரின் குடும்பத்தைச் சேர்ந்த நபர் யார்?
(1) வலீத் பின் முகீரா (2) உபை பின் கலப்
(3) அப்துல்லாஹ் பின் அபீ ரபீ.்.(4) அபூலஹப்

35. 'வியாபாரத்தில் பரகத்தை அழித்துவிடச் செய்யும்' என்று நபியவர்களால் எச்சரிக்கப்பட்ட விடயம்
(1) அளவையில் மோசடி செய்தல் (2) பொய்ச் சத்தியம் செய்தல்
(3) பொருட்களைப் பதுக்குதல் (4) ஊழியர்களின் சம்பளத்தைக் காலம் தாழ்த்துதல்

36. 'குப்ர்' என்பதன் கருத்து
(1) அல்லாஹ்வுக்கு நிகராக, மற்றொன்றை வணக்கத்துக்குத் தகுந்ததாகக் கருதுதல்
(2) அல்லாஹ்வை வணக்கத்துக்குரியவனாக ஏற்க மறுத்தல்
(3) மதம் மாறுதல்
(4) இறைவன் இல்லை எனக் கூறுதல்

37. நுஸ்ரி, கிராம மஸ்ஜிதுடன் நெருக்கமான உறவு கொண்டிருந்த வாலிபனாவான். லுஹர்த் தொழுகைக்காக மஸ்ஜித் நோக்கி வரும்போது, பாதையில் மோட்டார் சைக்கிலால் மோதுண்டு இரத்த வெள்ளத்தில் கிடந்த ஒருவனைக் காண்கிறான். இச்சந்தர்ப்பத்தில் அவன் முன்னுரிமை கொடுக்க வேண்டியது
(1) வேகமாகப் பள்ளிக்குச் சென்று தொழுதுவிட்டு, நோயாளியை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லல்
(2) எவரேனும் நோயாளியை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லட்டும் எனக்கருதி பள்ளிக்குச் செல்லல்
(3) உடனடியாக, நோயாளியை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லல்
(4) நோயாளியை அழைத்துச் செல்லும் பொறுப்பை மற்றொருவரிடத்தில் கையளித்தல்

38. முஹத்திஸ் என்பவர்
(1) ஹதீஸ் துறை அறிஞராவார். (2) பிக்ஹுத்துறை அறிஞராவார்.
(3) அல் - குர்ஆன் விளக்கவுரையாளராவார். (4) மஸ்ஹப் ஒன்றைப் பின்பற்றியவராவார்.

39. தூய இஸ்லாத்தைப் பாதுகாக்கும் நோக்கில் இமாம் அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) அவர்களின் கடுமையான எதிர்ப்பைப் பெற்ற சிந்தனைப் பிரிவு யாது?
(1) மு.்.தஸிலா (2) ஷீஆ (3) காரிஜி (4) முர்ஜிஆ

40. அல்-குர்ஆனைத் தொகுக்கும் முயற்சியில் கலீபாக்களான அபூபக்ர் (ரழி), உஸ்மான் (ரழி) ஆகிய இருவரது காலங்களிலும் பிரதான பங்கேற்ற ஸஹாபி
(1) ஹுதைபதுல் யமானி (ரழி) (2) ஸைத் பின் ஸாபித் (ரழி)
(3) ஸ.்.த் பின் அபீவக்காஸ் (ரழி) (4) முஆவியா பின் அபீ சுப்யான் (ரழி)

* *

[பக். 4 ஐப் பார்க்க

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

## இஸ்லாம் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, மொத்தமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை தருக.

(i) நஜீஸின் **இரண்டு** பிரிவுகளைக் குறிப்பிடுக.
(ii) பிக்ஹுக் கலைக்குப் பங்காற்றிய **இரண்டு** இமாம்களது பெயர்களை எழுதுக.
(iii) குப்ரை ஏற்படுத்தும் வழிமுறைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.
(iv) ஹஜ், உம்ரா ஆகிய அமல்களில் பேணப்பட வேண்டிய பர்ளான விடயங்கள் **இரண்டை** எழுதுக.
(v) இஜ்திஹாத் அனுமதிக்கப்பட்டது என்பதைச் சுட்டும் அல்-குர்ஆன் வசனமொன்றைக் குறிப்பிடுக.
(vi) 'லிஹார்', விவாகரத்தில் முடிவடையும் சந்தர்ப்பத்தைத் தெளிவாகக் குறிப்பிடுக.
(vii) இஸ்லாத்தின்படி, விதியை விசுவாசிப்பதன் மூலம் கிடைக்கும் **இரண்டு** பயன்பாடுகளைத் தருக.
(viii) இலங்கையில் இஸ்லாத்தின் அறிமுகம் பற்றிய கருத்துக்களை முன்வைத்துள்ள **இரண்டு** அறபு நூல்களைப் பெயரிடுக.
(ix) ஷரீஆவின் பார்வையில் திருமணத்தின் நோக்கங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.
(x) பொருளீட்டலை வணக்கமாக்கிக் கொள்வதற்கான **இரண்டு** வழிகாட்டல்களை எழுதுக.

**2.** (i) மு'ஜிஸாத் என்றால் என்ன?
(ii) ரஸூல்மார்களுக்குக் கிடைக்கப்பெற்ற அற்புதங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக.
(iii) அல்-குர்ஆன் குறிப்பிடும் **ஐந்து** அற்புதங்களைப் பட்டியலிடுக.

**3.** (i) 'ஹதீஸ்' என்பதன் இஸ்லாமியப் பரிபாஷைக் கருத்தைக் குறிப்பிடுக.
(ii) ஹதீஸ்களைப் பாதுகாப்பதற்காகக் கையாளப்பட்ட **மூன்று** வழிமுறைகளை எடுத்துக்காட்டுக.
(iii) இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்களது ஹதீஸ் துறைப் பங்களிப்பைச் சுருக்கமாக விவரிக்குக.

**4.** (i) இஸ்லாத்தில் ஒழுக்கத்தின் முக்கியத்துவம் யாது?
(ii) ஸூரா லுக்மான் குறிப்பிடும் **மூன்று** ஒழுக்கப் பண்புகளைக் குறிப்பிடுக.
(iii) அபூபக்ர் (ரழி) தனது கிலாபத்தின் போது மேற்கொண்ட **ஐந்து** பணிகளைச் சுருக்கமாக விளக்குக.

**5.** (i) ஸகாத் ஒரு கூட்டுக்கடமை என்பதை உறுதிப்படுத்துவதற்கான அல்-குர்ஆன் ஆதாரம் அல்லது ஹதீஸ் **ஒன்றை** முன்வைக்குக.
(ii) பொறுமைக்குரிய சந்தர்ப்பங்கள் **மூன்றையும்**, அதன்போது கடைப்பிடிக்க வேண்டிய பொறுமையின் வடிவங்கள் **மூன்றையும்** எடுத்துக்காட்டுக.
(iii) தொடர்பாடல் ஊடகங்கள் கொண்டிருக்க வேண்டிய **ஐந்து** பண்புகளை விளக்குக.

**6.** (i) மஸ்ஜிதுல் அக்ஸாவை அறிமுகப்படுத்துக.
(ii) ஆண் ஒருவருக்கு, ஏக காலத்தில் திருமணம் முடிக்கத் தற்காலிகமாகத் தடைசெய்யப்பட்ட **மூன்று** நபர்களைக் குறிப்பிடுக.
(iii) உள ஆரோக்கியத்தைப் மேம்படுத்திக் கொள்வதற்கான **ஐந்து** ஆலோசனைகளை முன்வைக்குக.

**7.** பின்வருவனவற்றுள் **இரண்டுக்கு** சிறுகுறிப்பு எழுதுக.

(i) தஸ்கியதுன்னப்ஸ்
(ii) உழைப்பின் முக்கியத்துவம்
(iii) அபூபக்ர் (ரழி) கால அல்-குர்ஆன் தொகுப்பு
(iv) உலக வாழ்வு பற்றிய இஸ்லாமிய நோக்கு

※※※

4. (i) இயேசுவானவரின் அற்புதச் செயல்களை எந்தெந்தப் பிரிவுகளில் வகைப்படுத்தலாம் ?

(ii) அப்பிரிவுகளில் **மூன்றைத்** தெரிவுசெய்து, அவை ஒவ்வொன்றின் மூலமும் இயேசுவானவரின் அதிகாரம் எவ்வாறு வெளிப்படுத்தப்பட்டதென்பதைக் காண்பிப்பதற்கு ஒவ்வோர் உதாரணம் தருக.

(iii) நீர் அல்லது நீர் அறிந்த ஒருவர் அனுபவித்த ஓர் அற்புதத்தைக் குறிப்பிட்டு, அதன் மூலம் ஒருவருக்குள் இறையரசு பற்றிய எவ்வாறான துலங்கல்கள் (பிரதிச்செயல்கள்) இருக்க வேண்டுமென இயேசு எதிர்பார்க்கிறார் என்பதை விளக்குக.

5. (i) "பொன்னும் வெள்ளியும் என்னிடமில்லை, ... இயேசு கிறிஸ்துவின் பெயரால் எழுந்து நடந்திடும்."

(அ) இவ்வாறு கூறியது யார் ?

(ஆ) இதன் பின்னணி என்ன ?

(ii) அவ்வேளையில் சுகமடைந்த நபர் முழுமையான சுகத்தைப் பெற்றுக்கொண்டார் என்பதற்கு அவரின் எச்செயல்கள் சாட்சியாகின்றன ?

(iii) இச்சம்பவத்தைப் போன்று இதற்குச் சமனான ஒரு சவாலுக்கு நீர் காண்பிக்கக்கூடிய வெவ்வேறு துலங்கல்களை (பிரதிச்செயல்களை) விளக்குக.

6. "இன்று நாம் வாழ்வது ஒரு பன்மைச் சமுதாயத்திலாகும்."

(i) பவுல் தமது மூன்றாவது திருத்தூதுப் பயணத்தின்போது எபேசு நகரில் எதிர்கொண்ட வெவ்வேறு சமய நம்பிக்கைகள், கொள்கைகள் யாவை ?

(ii) எபேசுவில் காணப்பட்ட இவ்வாறான சமய நம்பிக்கைகள், கொள்கைகள் ஆகியன ஏற்படுத்திய சவாலின் மத்தியில் பவுலின் துலங்கல்கள் (பிரதிச்செயல்கள்) எவ்வாறு அமைந்தன ?

(iii) மேற்படி நிலைமைகளின்போது பவுல் காண்பித்த துலங்கல்களுக்கு ஏற்ப இன்று இலங்கையில் நீர் காணும் அவ்வாறான நிலைமைகளுக்கு உமது துலங்கல்கள் எவ்வாறு அமைய வேண்டும் ?

7. பின்வருவனவற்றுள் **இரு** தலைப்புகளைத் தெரிவுசெய்து, அவற்றிற்கு திருமறையின் உதாரணங்களுடன் சிறுகுறிப்பு எழுதுக.

(i) இன்றைய திருச்சபைகளுக்கு ஆதித் திருச்சபையின் பெறுமதிகளின் முக்கியத்துவம்

(ii) கிறிஸ்தவத் திருமுழுக்கு

(iii) சமாதானத்திற்கு அர்ப்பணிப்போம்

(iv) எருசலேம் சங்கம்

* * *